# பகவத் பாதை




Bagavath Path

தனிச்சுற்றுக்கு மட்டும்　　இது ஒரு பகவத் மிஷன் வெளியீடு　　15-02-2013




கோபம், பயம் என்னும் ஒளியிலிருந்து தோன்றிய நிழலாக மட்டுமே கோபப்படுபவனும், பயப்படுபவனும் இருக்கிறான்.

அனுபவம் என்னும் ஒளியிலிருந்து பிறந்த நிழலே அனுபவிப்பவன். நிழலால் ஒளியை நிர்வாகம் செய்யமுடியாது. அப்படி நிர்வாகம் செய்ய முயலுந்தோறும் போராட்டமும் பிரச்சினையும் தவிர்க்கமுடியாதது.

- ஸ்ரீ பகவத்



# நான் யார் ?

- ஸ்ரீ பகவத்

நான் யார் என்னும் கேள்வி ஆன்மிக உலகில் அதிக முக்கியத்துவம் உடையது.

நான் யார் என்ற இந்தக் கேள்வியை நாம் அடுத்தவரிடம் கேட்போமாயின் அது அபத்தமான கேள்வியாகப் போய்விடும்.

இது நம்மை நோக்கி நமக்குள் நாமே கேட்டுக் கொள்ளவேண்டிய கேள்வி.

நம்மையே நாம் 'நான் யார்?' என்று கேட்டுக்கொண்டால் நமக்கு என்ன பதில் கிடைக்கும்?

உண்மையில் நாம் யார்? நாம் ஆன்மாவா? நாம் இந்த உடலா? நாம் என்பது நமது மனதா? நாம் என்பது நமது அகங்காரமா? நாம் என்பது எல்லாவற்றுக்கும் ஆதாரமான பரம்பொருளா? நாம் என்பது ஒரு சாட்சி நிலையா?

நாம் கேள்விப்பட்ட ஒரு வேடிக்கையான கதை. முற்காலத்தில் நிகழ்ந்ததுபோல் காட்டப்பட்ட ஒரு கதை.

ஒரு பயணி பக்கத்து நாட்டுக்குப் பயணம் செய்கிறார். அந்த நாட்டிலுள்ள சத்திரம் ஒன்றில் தங்குகிறார். அந்தச் சத்திரத்தில் அவரைப்போல் பலரும் தங்கியிருக்கிறார்கள்.

அங்கு தங்கியிருந்த பலரும் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தாலும், இவர் மட்டும் தூங்காமல் விழித்துக் கொண்டிருந்தார். இரவு வெகு நேரமானபோதிலும் இவர் தூங்காமல் விழித்துக் கொண்டிருந்ததால், சத்திரமேலாளர் அவரை விசாரித்தார்.

அதற்கு அந்தப் பயணி விநோதமான காரணமொன்றைக் கூறினார். "இங்கே நிறைய பேர் படுத்துத் தூங்கிக் கொண்டிருக்கிறார்கள். இந்தக் கூட்டத்தோடு கூட்டமாகப் படுத்துத் தூங்க எனக்கு மிகவும் பயமாக இருக்கிறது. இப்படித்தான் நான் சிறிய குழந்தையாக இருக்கும்போது திருவிழாக் கூட்டத்தில் தொலைந்துபோய்விட்டேன். எப்படியோ கஷ்டப்பட்டு எனது பெற்றோர் என்னை மீண்டும் கண்டுபிடித்துவிட்டார்கள். அதுபோல் இந்தக் கூட்டத்தோடு கலந்து படுத்து, நான் இந்தக் கூட்டத்தில் தொலைந்து போய்விட்டால் என்ன ஆவது?"

சத்திர மேலாளரும் அவரைச் சற்று விநோதமாகப் பார்த்தார். பிறகு அவரிடம் "நீங்கள் இந்தக் கூட்டத்தில் தொலைந்துபோகாமல் இருக்க ஒரு வழி செய்கிறேன்" எனக்கூறி அழகான ஒரு ரிப்பனை எடுத்துவந்து அந்தப் பயணியின் காலில் கட்டிவிட்டார்.

"இனி நீங்கள் எந்தக் கூட்டத்திலும் தொலைந்துபோக மாட்டீர்கள். அப்படியே நீங்கள் தொலைந்து போனாலும் இந்த ரிப்பனை வைத்து உங்களை நீங்கள் மீண்டும் கண்டுபிடித்துக் கொள்ளலாம்".

- இப்படிக் கூறி அந்த மேலாளர் அந்தப் பயணியை திருப்திப்படுத்தினார்.

திருப்தியடைந்த பயணியும் கூட்டத்தினரோடு கலந்து நிம்மதியாகத் தூங்கினார்.

அவர் தூங்கியதை அறிந்த அந்த மேலாளர் தனது வேலையைக் காட்டினார். அவர் அந்தப் பயணியின் காலில் கட்டியிருந்த ரிப்பனை அவிழ்த்து, பக்கத்தில் படுத்திருந்த இன்னொரு பயணியின் காலில் கட்டிவிட்டார்.

நமது பயணி காலையில் எழுந்து காலைப் பார்த்தார். காலில் ரிப்பனைக் காணோம். அது அடுத்த பயணியின் காலில் கட்டப்பட்டிருந்தது. அவரையும் தன்னையும் மாறிமாறிப் பார்த்தபடி உட்கார்ந்த பயணியிடம் வந்த மேலாளர் கேட்டார். "என்ன பத்திரமாக இருக்கிறீர்களா?"

பயணி பதில் கூறினார். "நல்லவேளை! உங்கள் உபாயத்தைப் பின்பற்றியதால் பத்திரமாக இருக்கிறேன். காலில் ரிப்பனைக்கட்டி என்னைக் காப்பாற்றிவிட்டீர்கள். நீங்கள் கட்டிய ரிப்பனின் மூலம் என்னை நான் கண்டுபிடித்துக்கொண்டேன். எவருடைய காலில் ரிப்பன் இருக்கிறதோ அவர் தான் நான் என்பதில் எனக்கு எந்தச் சந்தேகமும் கிடையாது. இதோ படுத்துக் கிடக்கும் நபரின் காலில்தான் ரிப்பன் உள்ளது. ரிப்பனைக் கட்டியுள்ளவர்தான் நான் என்பதில் எனக்கு எந்தச் சந்தேகமும் கிடையாது. இப்போது எனக்கு வேறு ஒரு பிரச்சினை ஏற்பட்டுள்ளது."

"என்ன பிரச்சினை?"

"ரிப்பன் கட்டியிருப்பதுதான் நான் என்பதில் எந்தச் சந்தேகமும் கிடையாது. ஆனால் ரிப்பன் எதுவும் இல்லாமல் உங்களிடம் பேசிக்கொண்டிருக்கும் நான் யார்?"

- இப்படி 'நான் யார்?' என்னும் கேள்வி நம்மை ஆட்டிப்படைத்துக் கொண்டிருக்கிறது.

கனவற்ற நிலையில் நாம் தூங்குவோமானால் நமக்கு நான் என்ற உணர்வு எதுவும் கிடையாது. இதுபோல், நினைவுகளற்ற சமாதி நிலையிலும் நான் என்ற அனுபவம் எதுவும் கிடையாது.

நினைவு என்னும் அம்சம் நமக்குள் செயல்படும் போது மட்டுமே 'நான்' என்ற உணர்வும் நமக்கு ஏற்படுகிறது. நமது கனவும், நினைவினால் ஆக்கப்பட்ட ஒன்றே. அதனால் கனவின்போதுகூட நமக்கு 'நான்' என்ற அனுபவம் உள்ளது.

நமக்கு ஏற்படும் நினைவு என்னும் சிந்தனையின் எந்த ஒரு பகுதியை எடுத்துக் கொண்டாலும். காண்பவன் - காணப்படும் பொருள் என்னும் ஓர் அம்சம் இருந்து கொண்டேதான் இருக்கும்.

நமது சிந்தனையில் இப்படி ஒரு இரட்டைத்தன்மை இருந்து கொண்டேதான் இருக்கும்.

இப்படிப் பிரித்துப் பார்ப்பதன் மூலமாகவே, நமது சிந்தனையினால், எந்த ஒன்றையும் புரிந்து கொள்ளமுடியும்.

நம்முடைய மனதில் இரண்டு பகுதிகள் உள்ளன.

அதில் ஒன்றுதான் நினைவு என்னும் இந்தப்பகுதி.

நம் மனதின் இன்னுமொரு பகுதி தான் உணர்வு.

நினைவு என்பது அறிவுப்பகுதி - Intellect

உணர்வு என்பது உணர்ச்சிப்பகுதி - Consciousness of feelings.

நினைவு என்பது என்ன? உணர்வு என்பது என்ன?

நினைவுகள் அனைத்தும் நினைவுத் தொகுப்பிலிருந்து - Memory யிலிருந்து உருவாகின்றன.

உணர்வுகளுக்கும் நினைவுத்தொகுப்புக்கும் சம்பந்தம் கிடையாது. உணர்வு என்பது உணர்ச்சிகளின் வடிவில் அனுபவமாகின்றன.

நினைவில் அடக்கமாகியிருக்கும் பகுதி எது?

What is the content of our Intellect?

முடிந்துபோன அனுபவங்களின் நினைவுத்தொகுப்பு மட்டுமே நினைவின் பகுதியாக அமைந்துள்ளது.

நினைவுகள் அனைத்தும் - Memoryகள் அனைத்தும் முடிந்துபோனவையே; இறந்து போனவையே.

முடிந்துபோன அனுபவங்கள், சேகரித்த கருத்துகள், நாமாக ஏற்படுத்திக்கொண்ட முடிவுகள்.

- இவை அனைத்துந்தான் நமது நினைவு - நமது Memory - நமது Intellect.

இவை அனைத்தும் உயிரற்றவை. இவை அனைத்தும் கற்பனையே. இல்லாத ஒன்றே. இருப்பதைப் போன்ற தோற்றத்தை மட்டும் ஏற்படுத்தக்கூடியவையே.

ஆனால் நமது உணர்ச்சியாக வெளிப்படும் உணர்வு என்பது மட்டுமே, நிகழும் உண்மை. நமது உணர்ச்சிகளை நாம் அனுபவிக்கமுடியும்; உணரமுடியும். அவை எவையும் கற்பனை அல்ல. அவை அனைத்தும் இருப்புத் தன்மையுடைய நிதர்சனமான உண்மை.

நமது உணர்வு, எத்தனையோ விதமான உணர்ச்சிகளாக, தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறது. இன்பம், துன்பம், கோபம், பயம், வருத்தம், மகிழ்ச்சி - இப்படி எத்தனையோ விதமான உணர்ச்சிகளாக வெளிப்படுத்திக் கொள்கிறது.

நமது உணர்ச்சிகள் மட்டுமே உண்மையானவை. நமது உணர்ச்சிகள் மட்டுமே நமது அனுபவங்களாகும். நமது அனுபவங்கள் அனைத்தும் நமது உணர்ச்சி நரம்புகளின் உதவியுடன் மட்டுமே அனுபவிக்கப்படுகின்றன.

நமக்கு ஏற்படும் உணர்ச்சிகள் அனைத்தும் கணந்தோறும் புதியவை. நமக்கு ஏற்படும் உணர்ச்சிகளில், முடிந்துபோன கடந்த கால உணர்ச்சி என்று எதுவும் கிடையாது.

எது அனுபவமாகிறதோ அது மட்டுமே அங்கு உள்ளது. நிகழ்கால உணர்ச்சி மட்டுமே உள்ளது.

நமது உணர்ச்சி மட்டுமே உண்மையானது. நமது உணர்ச்சிகள் அனைத்தும் கால, தேச, வர்த்தமானங்களைக் கடந்தது. அங்கு காலம் கிடையாது; கருத்து வடிவம் கிடையாது.

There is no time and space in our consciousness and feelings.

நமது நினைவில்தான் காலம், இடைவெளி ஆகியவை உள்ளன. நினைவுத் தொகுப்பைப் பயன்படுத்தியே, காலத்தையும், இடைவெளியையும், அளவீடுகளையும், கருத்துகளையும், கணிப்புகளையும் உருவாக்குகின்றோம்.

உணர்ச்சிகளைப் பொறுத்த அளவில்

ஒரு கணத்தில்

ஓர் உணர்ச்சி மட்டுமே சாத்தியம்.

ஒரே கணத்தில் இரண்டு விதமான உணர்ச்சிகள் சாத்தியமில்லை. உணர்ச்சியைப் பொறுத்த அளவில் இரண்டு என்பதே கிடையாது. ஒன்று மட்டுமே உண்டு. இரண்டு இல்லாததால், அங்கு ஒப்பிட்டுப் பார்ப்பதும் சாத்தியம் இல்லை. இடைவெளியே சாத்தியம் இல்லை. காலம் என்ற கணக்கீடே சாத்தியம் இல்லை.

"நான் யார்?" என்று நம்மை நாமே கேட்டுக் கொண்டால் நான் யார் என்று

நமக்குள் எந்தப் பகுதியைச் சுட்டிக் காட்டுவோம்?

நம்முடைய நினைவுப் பகுதியைச் சுட்டிக் காட்டுவோமா? அல்லது நமது உணர்வுப் பகுதியைச் சுட்டிக்காட்டுவோமா?

நினைவுப்பகுதி என்பது கற்பனையான பகுதி; கனவாக இருக்கும் பகுதி. கடந்தகால நினைவுகளால் மட்டுமே உருவான பகுதி. முடிந்துபோன செய்திகளால் மட்டுமே உருவாக்கப்பட்ட பகுதி. அது ஓர் உயிரற்ற பகுதி.

"நான்" என்பது ஓர் உயிரற்ற அம்சமா?

உணர்வுப்பகுதி தான் நமது உண்மையான இருப்பு நிலை. நமது உணர்ச்சிகள் தாம் நமது உண்மையான இருப்புநிலை. நமது உணர்வுதான் உயிருள்ள பகுதி. உண்மையில் அதுதான் நமது உண்மையான நான். நமது உணர்வுதான் உண்மையான நான். நமது உணர்ச்சிகள்தாம் நமது உண்மையான நான். அது தான் உயிருள்ள நான்.

நினைவுப்பகுதியில் இயங்கும் நான் வெறும் உயிரற்ற அம்சமே. அது வெறும் நிழலே. ஒவ்வொரு கணந்தோறும் நாம் ஏதாவது ஓர் உணர்ச்சியை உணர்ந்து அறிகிறோம். அங்கு உணர்ச்சி என்னும் நிகழ்வும், உணர்தல் என்னும் செயலும் உள்ளன.

உணர்ச்சியையும் உணர்தலையும் பிரிக்கமுடியாது. உணர்தலின்மூலம் உணர்ச்சியை அறிகிறோம் என்பது போன்ற நிலை எதுவும் அங்கும் கிடையாது. உணர்ச்சிக்கும், உணர்தலுக்கும் இடையில்

அனுபவம் - அனுபவிப்பவன் என்ற தன்மையினாலான எந்த உறவும் கிடையாது. உணர்ச்சி வேறு, உணர்தல் வேறு அன்று. இரண்டும் ஒன்றே. ஒரு தன்மையே இருவேறு பெயரில் அழைக்கப்படுகிறது.

உணர்ச்சி இல்லாமல் உணர்தல் இல்லை; உணர்தல் இல்லாமல் உணர்ச்சி என்பதும் இல்லை.

உணர்தல் என்பது தான் உண்மையான அனுபவிப்பவன்; உயிருள்ள அனுபவிப்பவன்.

அங்கு அனுபவமும் அனுபவிப்பவனும் ஒன்றே. அனுபவிப்பவன் என்பவன், உண்மையில் அனுபவிக்கும் இயக்கமே; செயலே.

நமது அனுபவங்கள் - நமது உணர்ச்சிகள் அனைத்தும் நமது நினைவின் மூலமாக அடையாளங்கண்டு புரிந்து கொள்ளப்படுகின்றன. அனுபவங்கள் அனைத்தும் நினைவாக்கப்படுகின்றன.

அப்படி நினைவாக்கப்பட்ட நிலையில்தான் அனுபவம் என்ற நினைவும் அனுபவிப்பவன் என்ற நினைவும் இடம் பெறுகின்றன.

அனுபவமும் நினைவின் அம்சமாக்கப்பட்டுப் புரிந்துகொள்ளப்படுகிறது. அனுபவிப்பவனும் நினைவின் அம்சமாக்கப்பட்டு புரிந்து கொள்ளப்படுகிறார்.

நினைவு என்னும் உலகில்தான் அனுபவம் வேறாகவும், அனுபவிப்பவன் வேறாகவும் பிரித்து அறியப்படுகின்றன.

நினைவுப்பகுதியில் இயங்கும் நான் மட்டுமே தன்னை 'நான்' என்று கூறிக்கொள்கிறது.

நம்முடைய அனுபவந்தான் நம்முடைய உண்மையான நான். நம்முடைய உணர்ச்சிகள் தாம் நம்முடைய உண்மையான நான்.

ஆனால் அவை, தம்மை 'நான்' என்று கூறிக் கொள்வதில்லை. நான் என்று நம்மை நாமே அடையாளப்படுத்திக் கொள்வது அனைத்தும் நமது நினைவில் மட்டுமே; நமது கற்பனையில் மட்டுமே; நமது நினைவு என்றும் கனவில் மட்டுமே.

நான் என்பது வெறும் நிழல் மட்டுமே. நிழல் என்பது, இருந்தாலும் ஒன்றுதான்; மறைந்தாலும் ஒன்றுதான். அது முக்கியத்துவமற்ற கனவு அம்சம் மட்டுமே.

நமது நினைவை - அறிவை - Intellect ஐ - பயன்படுத்தி புற உலகில் நாம் செய்யவேண்டிய அனைத்தையும் செய்து வருகிறோம்.

அறிவை பயன்படுத்தாத நிலையில் இந்த உலகில் எந்த உயர்வும் சாத்தியம் இல்லை. விஞ்ஞானக் கண்டுப்பிடிப்புகள் அனைத்தும் நமது அறிவின் மூலமே சாத்தியம்.

நமது அத்தனை அனுபவங்களும், கண்டுபிடிப்புக்களும் நினைவுத் தொகுப்பாக நம்மிடம் பதிவு செய்யப்பட்டுவிடுகிறது. அதைப் பயன்படுத்தியே நாம் பலவிதமான கருத்துகளையும், உண்மைகளையும் கண்டுபிடிக்கிறோம். அவற்றை நம்முடைய வளர்ச்சிக்கும், சமுதாய வளர்ச்சிக்கும் பயன்படுத்துகிறோம்.

புற உலகைப் பொறுத்த அளவில், நமது அறிவு மிகவும் இன்றியமையாதது.

ஆனால் அதே அறிவு நமது உணர்வையும், உணர்ச்சிகளையும் சீரமைக்கும் பொறுப்பை எடுக்கும்போதுதான் பிரச்சினைகளும் தலையெடுக்கின்றன.

அனுபவங்களைச் சீரமைக்க முயலும் போது, அனுபவிப்பவன் பொறுப்பை எடுத்துக் கொள்கிறான். அவன் எடுக்கும் பொறுப்பே அவனைத் தனிமைப்படுத்துகிறது; அனுபவத்திலிருந்து அவனைப் பிரிக்கிறது.

அனுபவிப்பவனாக நம்மை அறிவது என்பது நினைவின் அம்சமே. அது ஒரு after thought மட்டுமே.

உண்மையில் கோபப்படுபவனிடமிருந்து கோபம் ஏற்படவில்லை. பயப்படுபவனிடமிருந்து, பயம் ஏற்படவில்லை. கோபத்திலிருந்து கோபப்படுபவனும், பயத்திலிருந்து பயப்படுபவனும் தோன்றியுள்ளார்கள்.

கோபம், பயம் என்னும் ஒளியிலிருந்து தோன்றிய நிழலாக மட்டுமே கோபப்படுபவனும், பயப்படுபவனும் இருக்கின்றான்.

அனுபவம் என்னும் ஒளியிலிருந்து பிறந்த நிழலே - அனுபவிப்பவன். நிழலால் ஒளியை நிர்வாகம் செய்யமுடியாது. அப்படி நிர்வாகம் செய்ய முயலுந்தோறும் போராட்டமும், பிரச்சினையும் ஏற்படுகின்றது.

நினைவில் அடங்கியிருப்பது அனைத்தும் உயிரற்ற அனுபவங்களேயானாலும் நினைவு என்பதும் ஓர் இயக்கமே. நமக்கு ஏற்படும் நினைவு கற்பனையானதல்ல.

நினைவினால் புரிந்து கொள்ளப்படும் செய்திகளும் கருத்துகளும் கற்பனையாக இருந்தாலும்

நினைவுகள் அனைத்தும் நிதர்சனமான அனுபவங்களே. உண்மையான நிகழ்வே.

அந்த நிகழ்வில் நான் என்னும் அனுபவம் கூட ஏற்படலாம். அப்படி ஏற்படும் நான் என்பதும் தானாக வந்து தானாக மறைந்திடும் நிலையில்

அந்த நான் கூட உண்மையின் தன்மையைப் பெற்றுவிடுகிறது. அப்படி ஏற்படும் நான் எதையாவது சீரமைக்கும் பொறுப்பை ஏற்றுக் கொள்ளும்போதுதான்

தன்னைத் தனிமைப்படுத்திக்கொள்கிறது. தன்னை நிரந்தரமாக்க முயல்கின்றது.

நான் இல்லாமல் போய்விடவேண்டும் என்னும் எண்ணமும் நான் என்னும் இந்த உணர்வுக்கே வலிமை சேர்க்கின்றது.

நமது உணர்ச்சிகளில் நமக்கு விருப்பமானவை ஏற்படலாம் அல்லது விருப்பமற்றவை ஏற்படலாம்.

அவை அனைத்தும் கணநேர நிகழ்வுகளே. தாமாக வந்து, தாமாக மறைந்துவிடும். நமது உணர்வுகளுக்குள் போராட்டம் எவையும் கிடையாது..

நமது நினைவு அம்சம் உள்ளே நுழையும் போதுதான் நாம் சில உணர்ச்சிகளைத் தேர்ந்தெடுக்கிறோம்; சில உணர்ச்சிகளைப் புறக்கணிக்கிறோம்

நமது உணர்ச்சிகள் அனைத்தும் கள்ளங்கபடமற்றவை; சுயமுரண்பாடற்றவை; குழந்தைத் தனமானவை.

நமது உண்மையான நான் கள்ளங்கபடமற்ற குழந்தையாக உள்ளது.

குழந்தைகளின் செயல்பாடுகளை நாம் பார்த்திருக்கிறோம். குழந்தைகள் எப்படிச் செயல்படுகின்றன?

குழந்தைகள் உணர்ச்சிகளற்ற ஜடம் அல்ல. குழந்தைகள் பலவிதமான உணர்ச்சிகளைக் காட்டும். ஆனால் அவை எந்த உணர்ச்சிகளையும் பிடித்து வைத்திருப்பதில்லை.

தான் வெளிக்காட்டும் எந்த உணர்ச்சியையும் குற்றமாக எடுத்துக்கொள்வதில்லை. அதனால்தான் அதனைக் கள்ளங்கபடமற்ற தன்மையாக எடுத்துக்கொள்கிறோம்.

ஒரு குழந்தை தனது தாயிடம் கூட முரண்படலாம்; தனது தந்தையிடம் கூட முரண்படலாம்;

தனது சூழ்நிலையை எதிர்த்துக்கூட முரண்படலாம்.

ஆனால் எந்த ஒரு குழந்தையும் தனக்குத் தானே மட்டும் முரண்படுவது சாத்தியமில்லை.

உண்மையான நான் என்பதும் சுயமுரண்பாடற்றது.

★

## ஸ்ரீ பகவத் மிஷன் மையங்கள் :

★ ஸ்ரீ பகவத் மிஷன், சென்னை மையம்
23/10, Old Bank of Baroda Street,
Secretariate Colony, Ambattur, Chennai - 600 053.
Cell : 9884097438, 9952071525.

★ ஸ்ரீ பகவத் மிஷன், திருப்பூர் மையம்
ஸ்ரீ பாலகுமரன் நிட்ஸ்,
40, தட்டான் தோட்டம், 4-வது தெரு,
பல்லடம் ரோடு, திருப்பூர்-4.
செல் : 9944044988, 9442215248, 9865623709

★ ஸ்ரீ பகவத் மிஷன், பரமத்தி வேலூர் மையம்,
270, பொத்தனூர் ரோடு, முருகன் தியேட்டர் எதிரில்,
பரமத்தி வேலூர், நாமக்கல்.
செல் : 9360579181, 9360110755, 9787253751

★ ஸ்ரீ பகவத் மிஷன், சேலம் மையம்
அம்ருதா ஹோமியோ கிளினிக்,
8A/189, சரஸ்வதி தெரு, அத்வைத ஆஸ்ரமம் ரோடு,
புதிய பஸ் நிலையம் எதிரில், சேலம்-636 004.
செல் : 9488694453, 9894377433, 9443290559

## சந்தாவை செலுத்தாதவர்களுக்கு ஒரு வேண்டுகோள்

நமது வேண்டுகோளுக்கு இணங்க சந்தா செலுத்தியவர்களின் எண்ணிக்கை 624 ஆக உயர்ந்துள்ளது. ஒரு வருடம் சந்தா செலுத்தியவர்கள் தங்கள் சந்தாவை புதுப்பித்துக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கின்றோம். மேலும் சந்தா செலுத்தாதவர்கள் வருகின்ற ஏப்ரல் மாதம் 10-ம் தேதிக்குள் செலுத்தி தங்களுக்கு பாதை தொடர்ந்து வர உதவுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

பின்வரும் ஏதாவது ஒரு வழியில் சந்தாவை செலுத்தலாம்.

1. சந்தா - ரூ. 100/- (1 ஆண்டு) ரூ. 200/- (2 ஆண்டு) ரூ. 300/- (3 ஆண்டு)
2. ஆயுள் சந்தா - ரூ. 1000/-

நன்கொடைகளை வழங்கி ஸ்ரீ பகவத் மிஷனின் தொண்டில் பங்கெடுத்துக்கொள்ள விரும்புபவர்கள் பின்வரும் ஏதாவது ஒரு வழியில் உதவலாம்.

1. ஆண்டு நன்கொடை - ரூ. 1000/- (ஆண்டு ஒன்றுக்கு)
2. ஆயுள் நன்கொடை - ரூ. 10,000/-

நன்கொடை மற்றும் சந்தா அனுப்புபவர்கள் "Sri Bagavath Mission" என்ற பெயரில் சேலத்தில் செல்லதக்க Cheque, D.D. அல்லது M.O. ஆக அனுப்பலாம். அல்லது, HDFC, Car Street Branch, Salem, A/c. No. 15907620000075, IFSC : HDFC 0001590 என்ற எண்ணில் நேரடியாக செலுத்தலாம். Bank A/C ல் நேரடியாக செலுத்தியவர்கள் செல் : 9789165555 என்ற எண்ணில் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.

ஸ்ரீ பகவத் மிஷன்
தலைமையகம், சேலம்.

## ?கேள்வி பதில்

கேள்வி : நான் ஒரு அரசுத்துறை பணியாளர். எனக்கு லஞ்சம் வாங்குவது பிடிக்காது. எனது துறையில் உயர் அதிகாரியும், இடைநிலை பணியாளரும் தங்கள் வேலையைச் செய்து முடிப்பதற்கு லஞ்சம் வாங்குகிறார்கள். எனக்கு அதில் உடன்பாடு இல்லை. என்னுடைய உயர் அதிகாரி கொடுக்கும் சில சிக்கல்களை நான் எப்படி எதிர்கொள்வது? அகத்தில் தெளிவு இருந்தும் புறத்தில் எப்படிச் செயல்படுவது?

பதில் : ஓர் அன்பர் நேர்மையான அரசுப் பணியாளர். ஆன்மிகத்தில் ஆர்வமுடையவர். வள்ளலாரின் பக்தர். சைவ உணவு பழக்கமுள்ளவர். தனது வேலைக்காக லஞ்சமாக பணம் வாங்குவதில்லை என்பதில் உறுதியாக இருப்பவர். மதுப் பழக்கம் இல்லாதவர். தன் கடமையைச் சிறப்பாக செய்யக்கூடியவர்.

இந்தச் சூழ்நிலையில் தன் துறைக்கு புதியதாக மாற்றலாகி வந்த உயர் அதிகாரி அவருக்கு மூன்று வகையில் தொல்லை கொடுத்திருக்கிறார். அவரது குடும்பத்திற்கு தேவையான நல்ல கடல் மீனை, மீன் மார்க்கெட்டில் வாங்கிவரச் சொல்லுகிறார். மேலும் பணி நிமித்தமாக வெளி ஊருக்குச் செல்லும்போது அதிகாரி மது அருந்துவது வழக்கம். அந்த சூழ்நிலையில் அதிகாரியுடன் அன்பர் உடன் இருந்து உதவி செய்ய வேண்டி கட்டாயப்படுத்துகிறார். இதற்குமேல் அதிகாரிக்கு வரவேண்டிய லஞ்சப் பணத்தை அன்பரை அனுப்பி வாங்கி வருமாறு கூறுகிறார். இவ்வாறு மூன்று வகையில் தொல்லை கொடுத்திருக்கிறார் உயர் அதிகாரி.

இன்று இருக்கும் அரசுத் துறையில் பெரும்பாலும் மேற்சொன்னவை நடப்பது என்பது வழக்கம். உயர் அதிகாரியை எதிர்த்து அன்பரால் ஒன்றும் செய்துவிடமுடியாது. அன்பருக்கு தான் வைத்திருக்கும் கொள்கைக்கு நேர் எதிராகச் செயல்படுவது போல் தோன்றியது. மிகுந்த மனவேதனையில் வேலையை விட்டுவிட வேண்டியதுதான் என புலம்பிக் கொண்டு, நான் என்ன தான் செய்வது என விரக்தியுடன் கேட்டார்.

அன்பருக்கு பின்வருமாறு விளக்கம் கொடுக்கப்பட்டது.

உயர் அதிகாரிக்குக் கீழ்பணிந்து அரசுப் பணிகளை சிறப்பாகச் செய்யவேண்டியது நமது கடமை. அன்பரிடம் உயர் அதிகாரி கடல் மீனுக்குப் பதிலாக மார்க்கெட்டில் நல்ல தரமான ஆப்பிள் பழங்களை வாங்கிவருமாறு கூறியிருந்தால், அன்பருக்கு கொஞ்சமும் வெறுப்பும் கோபமும் வந்திருக்காது. தன்னுடைய சைவ உணவுக் கொள்கைக்கு எதிராகச் செயல்பட வேண்டியது வரும்போது தான் அன்பரால் ஏற்றுக்கொள்ளமுடியவில்லை. காரணம் அன்பர் ஒருபோதும் மீன் மார்க்கெட் சென்றவர் இல்லை. தன்னை இந்த இடத்தில் தனக்கு தெரிந்தவர்கள் யாராவது பார்த்தால் தன்னைப் பற்றி என்ன நினைப்பார்கள் என்று மிகுந்த வேதனை அடைந்திருக்கிறார்.

அன்பர் சைவ உணவுப் பழக்கமுள்ளவர் என்பதால் மற்ற அனைவரும் அப்படித்தான் இருக்கவேண்டும் என்ற அவசியம் கிடையாது. இந்த மீன் மார்கெட்டுக்கு போகும் வேலையில் ஈடுபடும்போது உயர் அதிகாரிக்காக செய்கிறோம், நமக்காக கொஞ்சமும் கிடையாது என்பது மட்டுமே நமது மனதிற்குத் தெரிந்தால் போதும். நம்மைப் பற்றி மற்றவர்கள் என்ன நினைத்தாலும் நாம் என்ன தான் செய்யமுடியும்?.

அடுத்தது பணி நிமித்தமாக வெளி ஊருக்குச் செல்லும் போது அதிகாரி அன்பரையும் மது அருந்த அழைக்கிறார். அன்பர் தனக்கு மது அருந்தும் பழக்கமில்லை எனக்கூறுகிறார். வேறுவழி இல்லாத இந்தச் சூழ்நிலையில் அதிகாரியுடன் அமைதியாக இருந்து அதிகாரி மது அருந்தி முடித்த பிறகு அவரை கவனமாக அழைத்து வந்தால் போதும். வேறு என்ன செய்யமுடியும்?. அன்பர் இந்த இடத்திற்கு விரும்பி வரவில்லை. மேலும் தன்னுடைய கொள்கையையும் எவருக்கும் விட்டுக் கொடுக்கவில்லை. நம்முடைய அதிகப்படியான புறச்செயல்பாடு இது மட்டுமே.

இதற்கும் மேலாக அதிகாரிக்கு வரவேண்டிய லஞ்சப் பணத்தை அன்பரை அனுப்பி வாங்கிவருமாறு கூறுவது. இதிலும் அன்பர் அந்தப் பணத்திலிருந்து தனக்கோ, தன்னுடைய குடும்பத்திற்கோ ஒரு காசும் எடுத்துக்கொள்வது கிடையாது. இதில் அன்பர் எந்த இடத்திலும் லஞ்சம் வாங்கவில்லை.

அதிகாரி நேரிடையாக பணம் வாங்கமுடியாது என்பதால் அன்பரை அவருடைய தேவைக்குப் பயன்படுத்துகிறார்.

மேற்சொன்ன மூன்று நிகழ்வுகளிலும் அன்பர் தன்னுடைய விருப்பத்தின் முயற்சியால் இங்கு எதுவுமே செய்யவில்லை. அந்தந்த சூழ்நிலைகளுக்கு தகுந்தவாறு முடிந்தவரை அனுசரித்துச் செல்கிறார். அன்பரின் தனிப்பட்ட கொள்கையில் எந்தத் தவறும் கிடையாது. யதார்த்த வாழ்வில் சில நடைமுறை சூழ்நிலைகளில் மற்றவர்கள் அனைவரும் நமது கொள்கைப்படி நடந்து கொள்வதில்லை என்பதால் முடிந்தவரை மற்றவரை அனுசரித்து போவது மட்டுமே அன்பரால் முடியும் என்று கூறப்பட்டது.

மேற்சொன்னபடி அன்பர் தன்னுடைய பணியில் மற்றவர்களை அனுசரித்து நடந்து கொள்கிறார். சில ஆண்டுகளில் அன்பரைப் பற்றி அதிகாரி மற்ற சக ஊழியர்களின் மூலமாக அவருடைய நேர்மையையும், கொள்கைகளைப் பற்றியும் தெரிந்துகொள்கிறார். அதிகாரி ஓர் ஆண்டில் எல்லாச் சூழ்நிலைகளிலும் அன்பரைக் கவனிக்கிறார். அன்பர்மேல் மரியாதையும், மதிப்பும் அதிகாரிக்கு ஏற்படுகிறது.

ஒரு நாள் அதிகாரி அன்பரை அழைத்து நீங்கள் எனக்கு கீழே பணிபுரிந்தாலும் பண்புகளிலும், குணத்திலும் என்னைவிட உயர்ந்த நிலையில் இருக்கிறீர்கள். என்னுடைய பழைய செயல்களுக்காக தங்களிடம் மன்னிப்பு கேட்டுக்கொள்கிறேன் என்றும் மேலும் நான் உங்களின் பதவி உயர்வுக்காக தலைமையகத்தில் பரிந்துரை செய்துள்ளதாகவும் கூறியிருக்கிறார். அன்பர் மேற்கண்ட எந்த ஒரு இடத்திலும் தன்னுடைய பதவி உயர்வுக்காகவோ, தனக்கோ, குடும்பத்திற்காகவோ வேறு எந்தச் சலுகையையும் உயர் அதிகாரியிடம் எதிர்ப்பார்க்கவில்லை. அன்பர் தன் கடமையில் நேர்மையாகச் செயல்படுகிறார்.

அன்பர் செய்ததை எல்லாம் தன்னைப் பற்றி சமுதாயத்தில் உள்ளவர்கள் எப்படிப் பார்ப்பார்கள் என்று நினைத்துக் கவலைப்படாமல் தன் மனதிற்கு தான் நியாயமானவராகவும், நேர்மையானவராகவும் நடந்து கொண்டது மட்டுமே. அதுவே அவருக்கு மிகப்பெரிய வலிமையாக மாறிவிடுகிறது. அதனாலே எந்த ஒரு குற்ற உணர்வுமில்லாமல் மனப்பதட்டம் இல்லாமல் புற விசியத்தில் தெளிவாகச் செயல்படமுடிகிறது

மேற்சொன்னவைகள் எல்லோருக்கும் பொருந்தும் என்று கூறிவிடமுடியாது. ஒவ்வொருவருக்கும் அவர்கள் தம் துறையில் உள்ள அதிகாரிகள் மற்றும் சக ஊழியர்களின் போக்கு அவர்களுக்கு மட்டுமே நன்கு தெரியும். அவர்கள் அந்த சூழ்நிலையில் முடிந்தவரை மற்றவர்களை அனுசரித்து போவதால் மட்டுமே தன் பணியை சிறப்பாகச் செய்யமுடியும்.

நம்மைப் பொறுத்தவரை நாம் தர்ம நியாயங்களை அனுசரித்து நேர்மையாக நடந்துகொள்ள வேண்டும். நம்மைச் சுற்றி இருப்பவர்களையும் இவ்வாறுதான் இருக்கவேண்டும் என்று கட்டாயப்படுத்த முடியாது. அவர்களையெல்லாம் திருத்திவிட்டுதான் அடுத்தவேலை பார்ப்பேன் என்று சொன்னால் எந்த ஒரு காரியத்தையும் செய்யமுடியாது. அவர்களை அப்படியே ஏற்றுக்கொள்வதைத் தவிர நமக்கு வேறு வழியில்லை. அதே சமயம் அவர்களிடமிருந்து நம்மை பாதுகாத்துக்கொள்ளவும் தெரிந்துகொள்ள வேண்டும். எவ்வாறு பாதுகாத்துக் கொள்ளவேண்டும் என்பதை அவரவர் சூழ்நிலையை அவரவர்களே கணித்து அவர்கள் மட்டுமே முடிவு செய்ய முடியும்.

அகத்தெளிவு என்பது நமது மனதைப் புறக்கணிப்பது மட்டுமே. அதற்கு யாருடைய உதவியும் தேவைப்படாது. நாம் புரிந்துகொள்வது மட்டுமே போதும். புறத்தில் நாம் பலருடன் இணைந்து எல்லாவிதமான காரியங்களையும் சிறப்பாகச் செய்யவேண்டி இருப்பதால் முடிந்தவரை எல்லோரையும் அனுசரித்து, அங்கீகரித்து ஏற்றுக்கொள்வதால் மட்டுமே நமது எல்லாச் செயல்களையும் சிறப்பாகச் செய்யமுடியும். நமது குடும்ப உறுப்பினர்கள், நண்பர்கள், உறவினர்கள், சக தொழிலாளர்கள் என ஒவ்வொருவரும் அவர் அவர் தம் இயல்பில்தான் இருப்பார்கள். அகத்தெளிவு பெற்ற நாம்தான் மற்றவர்களின் இயல்பையும் ஏற்றுக்கொண்டு சிறப்பாகச் செயல்படவேண்டும்.

இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல் - குறள்

நமக்கு தொந்தரவு கொடுப்பவரையும் நாம் பொறுத்து ஏற்றுக்கொண்டு அவர் மனம் வெட்கப்படும் வகையில் நல்லச் செயலை செய்துவிடவேண்டும். இதுவே காலத்தால் மாற்றத்தை ஏற்படுத்தும்.

"அகத்தில் புறக்கணிப்போம்;
புறத்தில் முடிந்தவரை அனுசரிப்போம்".

V.A.P. சரவணன், சேலம்.
செல் : 99942-05880

வாழ்க வையகம்! வாழ்க வளமுடன்!!

## பாதையில் மலர்ந்த மலர்கள்

ஆன்மிகத் தேடலோடு பல ஆண்டுகளாக இருந்த நிலையில் மனவளக் கலையை முழுமையாகக் கற்றுக்கொண்டு அதை நடைமுறைப்படுத்தி தற்சோதனை, குடும்பம், சுற்றம், சமுதாயம் ஆகியவற்றில் தெளிவு பெற்றும், ஏதோ ஒன்று கிடைக்கவில்லையே எப்படி? எவ்வாறு? எங்கே கிடைக்கும்? என்று நினைத்த போது, ஞானவிடுதலை புத்தகம் எனக்கு முழு அறிவையும் புரிதலையும் கொடுத்தது.

அந்தப் புரிதலில் கூட சில கருத்துகளை ஏற்றுக்கொள்ள என் மனம் பக்குவம் அடையவில்லை. அந்த நியையில் பகவத் ஐயாவை செப்டம்பர் மாதம் மதுரையில் சந்தித்த போது நான் தேடிய அமைதி எனக்குக் கிடைத்தது. அதன்பின் எந்தக் கருத்துகளும் சொல்லத் தோன்றவில்லை. மேலும் இரண்டு மாதங்களில் புரிதல் என்ற விடுதலை, சரணாகதி தத்துவம், முழுமையான உணர்வாக அடைந்த போது, யாரிடமும் பகிர்ந்து கொள்ளவும் தோன்றவில்லை.

ஞானம் என்பது எங்கோ இல்லை, நம் மனத்துள் தான் உள்ளது. மனத்தை ஆறுபோல் அதன் போக்கில் இயங்க அனுமதித்தாலே அமைதி என்பது தானாகவே வந்துவிடும் என்று உணர முடிந்தது.

சில உணர்வுகளைச் சொல்லவும் முடியவில்லை, எழுதவும் முடியவில்லை. பகவத் ஐயா கூறியது போல் அந்த உணர்வுகளும் கூட உடல் உணர்வுகளே என்ற போது அந்த அனுபவங்களின் தொகுப்பில் கிடைத்த தெளிவு, மன அமைதி, போராட்டம் அற்ற மனம், முரண்பாடு அற்ற மனம், எதையும் எப்போதும் விரித்து பார்க்கக்கூடிய மனநிலை அனைத்தும் தாமாக உருவானதே உண்மை.

M. பரமேஸ்வரி பழனியப்பன்
சின்னமனூர்

## ஐயாவுடைய நிகழ்ச்சி

| நாள் | நிகழ்ச்சி நடைபெறும் இடம் | பொருள் | நிகழ்ச்சி ஒருங்கிணைப்பாளர் |
|---|---|---|---|
| 10-03-2013 | N.R.K. திருமண மண்டபம், பாளையப்பாளையம், இராஜபாளையம். | **நீங்களும் ஞானியாகலாம்** மாலை 5-30 to 8-00 மணிவரை | திரு. சங்கரநாராயணன் செல் : 9790276206 |
| 16-03-2013 | Red Cross Meeting Hall, (இரத்த வங்கி ) மேம்பாலம் இறக்கம், கணபதி நகர், தஞ்சாவூர். | **சாதாரண மனிதர்களும் ஞானியாகலாம்** மதியம் 3-00 to 7-00 மணிவரை | ரெய்கி மாஸ்டர் திரு. சதானந்தம் செல் : 90037 41221 |

16-03-2013 முதல் 19-03-2013 வரை தஞ்சாவூர், கும்பகோணம் முகாம்

## ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சகப் பயணியின் வணக்கம்,

நமது பகவத் ஐயா அவர்களின் சத்சங்க நிகழ்வு ஜனவரி 7ஆம் தேதியில் இருந்து திருவண்ணாமலையில் ஆங்கிலத்திலும் தமிழிலும் சிறப்புடன் நடந்துகொண்டிருக்கின்றன. இதில் தினமும் பல வெளிநாட்டு அன்பர்கள் கலந்துகொண்டு பயனடைந்து வருகிறார்கள். சென்ற ஆண்டு வந்து பயனடைந்தவர்களும் ஐயாவை சந்திக்கவேண்டும் என்பதற்காகவே இந்த ஆண்டும் வந்து, தான் பெற்ற தெளிவையும் தங்களது மகிழ்ச்சியையும் தெரிவித்துச் செல்கின்றனர். ஐயாவின் புதிய அணுகுமுறையால் பயனடைந்த வெளிநாட்டு அன்பர்களில் சிலர், தங்கள் நாட்டு மக்களும் பயனடையவேண்டும் என்பதற்காக ஐயாவின் "Don't Delay Enlightenment" எனும் நூலை ஐயாவின் அனுமதியோடு மொழிபெயர்க்க ஆரம்பித்திருக்கின்றார்கள்.

இவற்றையெல்லாம் பார்க்கும்போது இந்தியா ஓர் ஞானபூமி என்று முன்னோர்கள் சொன்ன வார்த்தை உண்மை என்று புரிகின்றது. உலகத்தவர்களுக்கே வழிகாட்டும் வகையில் இந்தியாவில் பல ஞானிகள் தோன்றியிருக்கின்றார்கள். புத்தர் தோன்றியது இந்தியாவில்தான். ஆனால் பல நாடுகளில் புத்தமதம் பின்பற்றப்பட்டு வருகிறது. மேலும் இந்தியாவின் தென்பகுதி ஒரு புனிதமான இடமாக ஆன்மிகத்திற்கு சிறப்பு வாய்ந்த இடமாக இயற்கையிலே அமைந்துள்ளது. அயல்நாட்டவர்கள் பலர் ஞானம்தேடி இங்கு வந்து சித்தர்களாகவும், ஞானிகளாகவும் வாழ்ந்து வந்திருக்கின்றனர். அந்த வகையில் வந்தவர்தான் போகரும் ஆவார்.

ஆன்மிகத்தில் இவ்வளவு சிறப்பு வாய்ந்திருப்பினும், இந்தியா இன்னும் பொருளாதார நிலையிலும், உலகியலிலும் வளரும் நாடாகவே இருந்துவருகின்றது. இதன் காரணம் என்ன?

அமெரிக்கா, இங்கிலாந்து, ஜெர்மன் போன்ற நாடுகள் பொருளாதாரத்திலும், உலகியலிலும் நன்கு வளர்ந்த நாடுகளாக இருந்தபோதிலும், ஆன்மிகத்திலும், உளவியலிலும் மிகவும் பின்தங்கிய நாடுகளாகவே இருக்கின்றன. மன அழுத்தத்தால் பாதிக்கப்பட்டவர்கள் அங்கு மிக அதிகம்.

அவர்கள் உலகியல் இன்பங்களை அனுபவிக்கவும் சுகபோக வாழ்க்கை வாழ்வதற்கும் மிகவும் விரும்புகிறார்கள். அதை நிறைவேற்றுவதற்காக கடுமையாகப் போராடுகிறார்கள். அதனால் பொருளாதாரத்தில் முன்னேற்றம் அடைந்துள்ளார்கள். அதேசமயம் மனதை எவ்வாறு கையாள்வது என்று தெரியாமல் போராடி மன அழுத்தத்திற்கு உள்ளாகியிருக்கிறார்கள்.

நாம் நம் நாட்டில் ஆன்மிகம் மேலோங்கியிருப்பதால், மனோரீதியாக ஓரளவிற்கு பாதிப்படையாமல் உயர்ந்த நிலையில் இருந்தாலும்கூட, பொருளாதாரத்திலும் உலகியல் வளர்ச்சியிலும் இன்னும் ஒரு வளரும் நாடாக பின்தங்கியே இருக்கின்றோம்.

ஆன்மிகத்தில் பக்தியின் உச்சமே சரணாகதி. அனைத்தும் இறைவனின் செயல் என்ற சரணாகதியே விடுதலையை தரவல்லது. இதுவரை வந்த ஞானிகளின் உபதேசமும் அதுவே. இந்த உபதேசம் மனதிற்கு ஓர் அமைதியைத் தருகிறது. அதேசமயம் இதே அணுகுமுறை புறத்திலும் பிரதிபலிக்கும்போது செயலற்று சும்மா இருக்கும் சோம்பலையும் கொடுத்துவிடுகிறது. புறத்தே திறம்பட செயல்பட ஆர்வமின்மையை ஏற்படுத்திவிடுகிறது. இதன் காரணமாகவே நம் நாட்டின் பொருளாதார வளர்ச்சியும் உலகியல் வளர்ச்சியும் பின்தங்கியே இருக்கின்றது.

இந்நிலையில் இதுவரை வந்த ஞானிகளிலிருந்து முற்றிலும் மாறுபட்ட புதிய கோணத்தில் புரிதலின்மூலம் ஞானத்தெளிவை வழங்கி வருகிறார் நமது பகவத் ஐயா அவர்கள்.

ஐயாவின் மனதைப்பற்றிய இந்த புதிய அணுகுமுறை ஆன்மிகத்தை அடுத்தகட்ட முன்னேற்றத்திற்கு அழைத்துச் செல்கின்றது. அகம் புறம் என்ற இருவேறு பகுதிகளாக புரிந்துகொள்வதால், அகத்தில் செயலற்றும், புறத்தில் முழுமையான செயல்களுடன் இருப்பதற்கான தெளிவு கிடைத்துவிடுகிறது.

இந்த அணுகுமுறையால் மட்டுமே ஆன்மிகத்தில் முழுமையும், உலகியலில் சிறந்த வளர்ச்சியும் அடைய முடியும்.

சமுதாயம் என்பது தனிமனிதனின் கூட்டே. ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய மனதைப் புரிந்துகொண்டு புறத்தில் சிறப்புடன் செயல்படும்போது ஓர் உயர்ந்த சமுதாயத்தையே உருவாக்க முடியும்.

இத்தகையத் தெளிவு பெறுபவர்களின் எண்ணிக்கை அதிகரிக்க அதிகரிக்க, சமுதாயம் மிக விரைவில் மாற்றமடையும். காலப்போக்கில் உலகத்திற்கே நம் நாடு முன் உதாரணமாகத் திகழவும் வாய்ப்புள்ளது. எனவே புரிந்துகொண்ட நாம் அனைவரும் ஒன்றுசேர்ந்து செயல்படுவோமாக.

அன்புடன்,

**K.S. ஜீவமணி,** ஆசிரியர்,
செல் : 97891-65555



மதுரை மாவட்ட நூலக அலுவலரிடம் ஸ்ரீ பகவத் ஐயாவின் ஞான நூல்கள் மற்றும் பகவத் பாதை மாத இதழ்களை வழங்கி மதுரை மாவட்டத்தின் அனைத்து நூலகங்களுக்கும் ஸ்ரீ பகவத் மிஷன் மூலம் பெற்றிட நடவடிக்கை மேற்கொள்ளுமாறு ஸ்ரீ பகவத் மிஷன் சார்பாக திரு. கோபிநாத் அவர்கள் கேட்டுக்கொண்டார்.



## ஜென் கதை

# மனத்தூய்மை

ஒரு ஜென் குருவின் ஆசிரமத்தில் தனியாக அமைக்கப்பட்டிருந்த ஒரு குடிசையில் சலனமில்லாத மனதை அடைய பயிற்சி மேற்கொண்டிருந்தான் ஒரு சீடன். யார் அவனைப் பார்க்க வந்தாலும் இவன் அவர்களை திரும்பிக்கூடப் பார்க்கமாட்டான்.

அவனுடைய குரு ஒருநாள் அவன் இருக்கும் குடிசைக்கு வந்தார். அவன் அவரையும் திரும்பிப் பார்க்கவில்லை. ஆனால் குரு முழுநேரமும் அங்கு உட்கார்ந்திருந்தார். மேலும் ஒரு செங்கல்லை கல்லின் மீது வைத்து தேய்த்துக் கொண்டிருந்தார். அவனால் இருப்புக் கொள்ளமுடியவில்லை.

அவன் கேட்டான்.

"நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?"

குரு சொன்னார்.

"செங்கல்லை கண்ணாடியாக ஆக்கிக் கொண்டிருக்கிறேன்"

அவன் சொன்னான்,

"செங்கல்லை கண்ணாடியாகவா? பைத்தியம் பிடித்துவிட்டதா? வாழ்க்கை முழுதும் தேய்த்துக் கொண்டிருந்தாலும் இது கண்ணாடி ஆகாது!"

இதைக் கேட்ட குரு சிரித்தார்.

தன் சீடனைத் திருப்பிக் கேட்டார்.

"அப்படி என்றால் நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்? செங்கல் கண்ணாடியாகாது என்றால் அலை பாய்ந்து கொண்டிருக்கும் மனதை கொண்டு சலனமில்லாத மனதை எப்படி அடைய முடியும். வாழ்நாள் முழுவதும் முயன்றாலும் முடியாதுதானே?".

அந்த வினாடியே அந்தச் சீடன் ஞானமடைந்துவிட்டான்.

மனதை தூய்மை படுத்துவதற்கு நீயாக எதுவும் செய்யத்தேவையில்லை. மனம் தன்னை தானே சரிபடுத்திக்கொள்ளும். அதை அதன் போக்கில் இயங்கவிட்டால் போதும். தானே அமைதியடையும்.

"மனதை தூய்மைபடுத்த எந்த பயிற்சியும், முயற்சியும் உதவாது"



ஜென் கதை 'மனத்தூய்மை'

நன்கொடை சந்தா செலுத்த விரும்புபவர்கள், ரூ.100/-க்கான சேலத்தில் செல்லத்தக்க Cheque/DD/MO-வை SRI BAGAVATH MISSION என்ற பெயருக்கு எடுத்து கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

31, இராமலிங்கசாமி தெரு, அம்மாபேட்டை, சேலம் - 636 003. தமிழ்நாடு, இந்தியா. தொடர்புக்கு : 97891 65555, 99942 05880.

**Book packet** containing printed books

To

*If undelivered please return to:*




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.

**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India. Printed by Sri Jayavel Press, Gandhi Maidanam, Ammapet, Salem-636 003. Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555.